# பெரிய கண்

காவிரிக்கரை ஓரம் பெரிய மேடையில் உட்கார்ந்திருந்த சாஸ்திரி அங்கவஸ்திரத்தை எடுத்து உதறிக் கொண்டு எழுந்தார்—அங்கவஸ்திரத்தை உதறினால் என்ன குறிப்பு என்பது அவருடன் உட்கார்ந்திருந்த அம்பாவு, பொகுபுத்தி என்ற இரண்டு பேரன்களுக்கும் வெகு நன்றாய்த் தெரியும்.

''ஏன் தாத்தா இப்பொழுதே வீட்டுக்குப் புறப்படுகிறாய்?'' என்று கேட்டான் பொகுபுத்தி.

''நாழியாகவில்லையா? வேறு என்ன செய்ய வேண்டும்?''

''ஒரு கதை சொல்லுகிறேன் கேளு, பிறகு புறப்படுவோம்'' என்றான் பொகுபுத்தி.

''சொல்லு கதையை'' என்றான் அம்பாவு.

''சாயங்கால நேரத்தில் கதை கேட்டாலும் சொன்னாலும் மலைப் பாம்பாகப் பிறக்கவேணும். நான் மாட்டேன். தவிர நாணலில் வாழும் பெண்கள் குளிக்கவரும் நேரம். பெண்கள் குளிப்பதைப் பார்க்கக் கூடாது'' என்றார் தாத்தா.

'இருட்டில் குளித்தால் ஒண்ணும் தெரியாது, தாத்தா'' என்றான் பொகுபுத்தி.

"அப்படி இல்லை. நாணல் பெண்கள் மின்னலைப்போல் பளிச்சென்றிருப்பார்கள். இருட்டில்கூட வெளிச்சமாகத் தெரியும்."

"அப்படி என்றால் கதை கேட்கமாட்டாயா?"

"வீட்டுக்குப் போவோம். சாப்பிட்ட பிறகு உங்களுக்குப் படுக்கை போடுகிறேன் பாரு, அப்பொழுது கேட்கிறேன்" என்று தாத்தா கூறியதும் எல்லோரும் வீட்டுக்குப் புறப்பட்டனர்.

இரவு சாப்பாட்டுக்குப் பிறகு சாஸ்திரி பேரன்களின் படுக்கையை உதறிப் போட்டுவிட்டு நின்றார்.

"சம்பி நீட்டாதே கதை கேளு" என்று பொகுபுத்தி கூறியதும் தாத்தா முழங்காலைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்தார்.

"தாத்தா, இது நிஜக்கதை. நீங்கள் எல்லாம் சொல்லுவேளே பொய்க்கதை, அந்த மாதிரி இருக்காது. பார்த்துக்கோ."

"இந்த ஊரிலே மாசித்தெரு என்று ஒரு தெரு இருக்கிறது அங்கே 16-ம் நம்பர் வீட்டில் ஒரு பெண் இருக்கிறாள்."

"அழகா இருக்கிறாள், கலியாணம் பண்ணிக்கொள்ள வேணும் என்று சொல்லப்போகிறாய்."

"விளையாடாதே, தாத்தா! கேளு."

"ஒருநாளைக்கு நானும் அம்மாவும் கடைத் தெரு வழியாகப் போனோம். எதிர்த்தாப்போல இந்தப் பெண் அவள் அம்மாவோடெ வந்தாள்."

'என்ன பேரு?"

"பெண்ணைத் தெரிஞ்சுகொள்வதற்கு முந்தி பேர் எப்படித் தெரியும்? அந்தப் பெண் தாழம்பூ மடல் மாதிரி இருந்தாள். ஆனால், அவள் கண் மாத்திரம் பயமாக இருந்தது. ஆந்தைக் கண் என்போமே, அதைவிட இரண்டு பங்கு

பெரிதாக இருந்தது. "ஏனம்மா, கண் இப்படி இருக்கிறதே? கீழே விழுந்துடாதா?" என்று அம்மாவைக் கேட்டேன். "அதெல்லாம் விழாது. சுவாமி கொடுத்தது விழாது" ன்னு சொல்லிவிட்டாள். அம்மாவுக்கு ஒண்ணும் தெரியாதுன்னு எனக்குத் தோணித்து. "நான் விசாரிக்கிறேன் பார்"னு சொன்னேன். ராத்திரி எல்லாம் இதைப்பத்தி யோசித்தேன்.

மறுநாளைக்குப் பள்ளிக்கூடம் போனபொழுது ஒரு யோசனை தோணித்து. எங்க கிளாஸ் பெண்கள் ஒவ்வொருத்தியையும் விசாரித்தேன். ஒருவருக்கும் ஒண்ணும் தெரியவில்லை. ஒரு பெண் மட்டும் தங்கள் தெருவில் அதிசயமான பெண் இருப்பதாகச் சொன்னாள். என்ன அதிசயம் என்று கேட்டபொழுது அவளுக்குக் கண் அறுந்து விழுவது போல் இருப்பதாகவும், தூங்கும்போது கண்ணை எடுத்து வைத்துவிட்டுத் தூங்குகிறாள், காலையில் எழுந்திருந்து எடுத்து வைத்துக்கொள்கிறாள் என்றும் சொன்னாள். காலம்பரப் பாக்கலாமான்னு கேட்டேன். "அந்தப் பெண்ணும் அவள் அம்மாவும் எங்கள் வீட்டுக்கு அடுத்த வீட்டு திண்ணையில்தான் தூங்குகிறார்கள். ஒருத்தரையும் கேட்க வேண்டியதில்லை" என்றாள்.

முந்தாநாள் காலம்பர காபி கூடச் சாப்பிடாமல் அந்த வீட்டுத் திண்ணைக்குப் போனேன். அந்தப் பெண் தூங்கிக்கொண்டிருந்தாள். அவள் அம்மாள் எழுந்திருந்து தலை எல்லாம் வாரிக்கொண்டு எங்கோ புறப்படத் தயாராக இருந்தாள். பெண்ணுக்குப் பக்கத்திலிருந்த விளக்குப் பிறையில் இரண்டு கண்கள் இருந்தன. நான் பாட்டுக்கு ஒன்றும் தெரியாதுபோல் அவள் எப்பொழுது எழுந்திருப்பாள் என்று பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தேன்.

கொஞ்சநேரமான பிறகு அவள் எழுந்திருந்து கண்ணிமையைத் திறந்தாள். என்ன ஆச்சர்யம்! அவளுக்கு நம்மைப்போல் சாதாரணக் கண்தான் இருந்தது. உடனே

ஒரு சொம்பு தண்ணீர் எடுத்துப் பல்லைத் தேய்த்து முகத்தை அலம்பிக்கொண்டாள். பிறகு முகத்தில் ஏதோ பவுடரைப் பூசிக்கொண்டாள். கடைசியில் பிரையில் இருந்த இரண்டு கண்களையும் தன் கண் மேலே வைத்து எப்படியோ கட்டிக்கொண்டாள். எனக்குக்கூட அந்தப் பெரிய கண் நிஜம் போலவே தோணித்து.

அதற்குள்ளே அவள் அம்மாள் ஒரு அலுமினிய டம்ளரில் எதையோ கொண்டுவந்து கொடுத்ததை அவள் வாங்கிச் சாப்பிட்டுவிட்டு ஒரு கறுத்துப்போன ஜிகிணைப்பூ போட்ட பாவாடையையும் சட்டையையும் எடுத்து உடுத்திக்கொண்டாள். ஒரு நிமிஷத்தில் தலையை வாரி இரண்டு சடை போட்டுக்கொண்டு நெற்றியிலே ஒரு திலகம் இட்டுக்கொண்டாள். கையில் ஒரு சின்னப் பையை எடுத்துக்கொண்டாள். அதற்குள் என்னவோ கல்லென்று புரண்டது.

"அம்மா, ரெடி" என்ருள்.

தாயார்க்காரி புடவையை உதறிக் கட்டிக்கொண்டதும் இருவருமாகப் புறப்பட்டுவிட்டார்கள்.

எனக்கு அவள் என்ன செய்யப்போகிருள் என்று பார்க்கவேணும் போல் இருந்தது. கொஞ்சதூரம் தள்ளி அவர்கள் பின்னுல் நடந்து போனேன்.

"அதெல்லாம் சரி, பொகுபுத்தி. நீ திண்ணையில் உட்கார்ந்திருந்தபொழுது யாரு என்று அவர்கள் கேட்கவில்லையா ?" என்று குறுக்கிட்டார் தாத்தா.

"அந்தப் பெண் கேட்டாள். 'இங்கே இரு வரேன்' என்று பாட்டி இருக்கச் சொன்னதாகப் புளுகினேன். நம்பி விட்டாள்."

"நீ கதை சொல்றதுக்கு லாயக்குத்தான், மேலே சொல்லு" என்ருர் தாத்தா.

பிறகு முன்தெருக்களை எல்லாம் தாண்டி கடைத்தெரு முனை பிள்ளையார் கோவிலில் அவர்கள் மூன்று குட்டு குட்டிக்கொண்டு, மூன்று அரைத் தோப்புக்கரணம் போட்டார்கள். அதற்குப் பிறகு அந்தப் பெண் பையை அவிழ்த்து கால் சதங்கையை எடுத்துக் கட்டிக்கொண்டாள். எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. பிறகு கால் சதங்கை சத்தம் செய்ய பிள்ளையார் கோவிலுக்கு மூன்றாவதாக இருந்த கடைவாசலில் போய் நின்றார்கள்.

மளிகைக் கடைச் செட்டியார் அப்பொழுதுதான் கடையைத் திறந்துவிட்டு 'ஆயிமகமாயி'ன்னு கல்லாப் பெட்டியில் உட்காரும் சமயம். தாயார்க்காரி தாம் தித்தாம், தைதத்தை என்று ஆரம்பித்தாள். பெண் வணக்கம் செய்து நாட்டியமாட ஆரம்பித்தாள்.

கடை திறந்த வேளையில் போணி ஆவதற்கு முன்னால் செட்டியார் அவளை அடித்து விரட்டுவார், பார்க்கலாம் என்று எண்ணிக்கொண்டிருந்தபொழுது செட்டியார் அவளிடம் ஒரணாவைத் தூக்கிக் கொடுத்தார்.

எனக்குக் கோபம் கோபமாக வந்தது. இவ்வளவு வேஷமும் இதற்குத்தானா என்று நினைத்துக்கொண்டே நின்றுவிட்டேன். காசை வாங்கிக்கொண்டு அவர்கள் போய்விட்டார்கள்.

மளிகைக் கடையில் வாடிக்கைக்காரர்கள் யாரும் வந்த பாடில்லை. எனக்கு ஒரு யோசனை தோணித்து.

"செட்டியாரே, எதுக்காக போணியாவதற்கு முந்தி அவளுக்குக் காசுகொடுத்தீங்க ?"ன்னு கேட்டேன்.

"அந்தக் கண்ணைப் பார்த்தால் மகமாயி கண்மாதிரி இருக்கு. அதுக்காகக் கொடுத்தேன்."

"அது பொய்க் கண். இப்பொத்தான் பார்த்துவிட்டு வருகிறேன். அவளுக்கு நிஜக் கண் நம்மைப்போலத்தான் இருக்கு. ஏமாந்து போயிட்டீங்களே" என்றேன்.

“அது மட்டுமில்லே. அவள் வந்து ஆடிவிட்டுப்போனல் அன்னிக்கு வியாபாரம் நல்லா ஆவுது என்ருர். ஏன் தாத்தா, அப்படி உண்டா ?” என்று பொகுபுத்தி கதையை நிறுத்திஞன்.

தூக்கத்தில் யோசித்துவிட்டுக் காலேயில் பதில் சொல்வதாக தாத்தா சொன்னதும் பொகுபுத்தி துப்பட்டியை இழுத்துப் போர்த்துக்கொண்டு தூங்க ஆரம்பித்தான்.